வெறிகொளைம்பொறியை வெல்லினும்பொருது வெல்லுதற்கரிய காலனை, முறியவெல்லினும் வெலற்கருங்கொடிய முரணவாயமரா ரணைலா, மறிவினுணிறுவு கம்மியன்செயவு மரியவாயவனர் புரியுமி ப், பொறிகள்செய்யும்வினை யின்னபொன்னணிபுரத்துவீதிக ளுள்ளா ததுமால். (உகூ)

கலிநிலைத்துறை.

கழையுந்தாமமுஞ் சுண்ணமுமணிநிழற் கலனுங்
குழையுந்தூபமுந் தீபமுங்கும்பமுந் தாங்கித்
தழையுங்காதலர் வரவுபார்த்தன்பகந் ததும்பி
விழையுங்கற்பினு ளொத்தனவிழாவறா வீதி. (௩0)

ஆலநின்றமா மணிமிடற்றண்ணலா னந்தக்
கோலநின்றசே வடிநிழல்குறுகினார் குணம்போல்
வேலைநின்றெழு மதியெதிர்வெண்ணிலாத் தெண்ணீர்
காலநின்றன சந்திரகாந்தமா ளிகையே. (௩க)

குன்றநேர்பளிக் குபரிகைநிரைதொறுங் குழுமி
நின்றபல்சரா சரமுமந்நிழல்வாய் வெள்ளி
மன்றகம்பொலிந் தாடியமலரடி நிழல்புக்
கொன்றியொன்றறக் கலந்தபல்லுயிர்நிலை யனைய. (௩உ)

கறித்தருந்துபுற் குவைகழீஇக்காற்றொடர் பரியத்
தெறித்தகன்றயன் மரகதசித்திரத் தெற்றி
யெறித்தபைங்கதிர்க் கொழுந்தையுமெட்டிநா வளைத்துப்
பறித்துமென்றுவா யசைப்பனபசலையான் கன்று. (௩௩)

சிறுகுகண்ணவாய்க் காற்றெறிசெவியவாயப் பாச
நிறுகுகாலவாய்க் கோட்டுமானினம்வழங்க காறுங்
குறுகுநுண்மருங் கிறுத்தெழுகோட்டுமா னினம்போ
மறுகும்வண்டுசூழ்ந் திறைகொளமான்மத நாறும். (௩௪)

மாடமாலையு மேடையுமாளிகை நிரையு
மாடரங்கமு மன்றிவேளன்னவர் முடியு
மேடவிழ்ந்ததா ரகலமுமிணைத்தடந்தோளுஞ்
சூடுமாதரார் சீறடிப்பஞ்சுதோய சுவடு. (

---

(உகூ) கம்மியன் - தேவதச்சன். யவனர் - சிற்பர்.

(௩0) குழை - மாந்தளிர்.

(௩௪) கோட்டுமானினம் - கொம்புகளையுடைய யானைக்கூட்டம், மலைசிகரம்போன்ற ஸ்தனங்களும், மான்போன்ற பார்வைகளையுமுடைய பெண்கூட்டம். மான்மதம் - பெரியமதம், கஸ்தூரி.

(௩ரு) சீறடி - சிற்றடி.

மருமசெம்புன லாறிட மாறடுகோட்டுப்
பருமசெங்கண்மால் யானையின பனேக்கையுமறைநூ
லருமைசசெம்பொரு ளாயநதவர்க் கரும்பொருளீவோர்
தருமசெங்கையு மொழுகுவ தானநீராறு. (௩௬)

பரியமாமணி பத்தியிற் பதித்திருட்படலம்
பொரியவில்லிடக் குயிற்றிய பொன்னராமியமுந்
தெரியமாமுர சொலிகெழு செம்பொனுடாஙகு
மரியமின்பயோ தாஞ்சுமநதாடுவ கொடிகள். (௩௭)

வலம்படும்புயத் தாடவர் மார்பமேற்புலவிக்
கலம்படாநதபூண் முலேயினார் காலெடுத்தோசசச
சிலம்பலம்பிசை மழுஙகமுன னெழுமவர்தேநதாரப்
புலம்புவண்டு நொநதரற்றிய பொஙகுபேரொலியே (௩௮)

தையலார்மதி முகஙகளுந தடங்களுஙகுழைய
மையளாவிய விழிகளு மாடமுஙகொடிய
கையுநாண்மலர்ப் பொநும்பருங கறஙகிசைவண்ட
நெயயவோதியும் வீதியு நீளறனெறிய. (௩௯)

மலருநதிங்கடோய மாடமுஞ செயவணமணஙக
ளலருநதண்டுறை யுஙகுடைந தாடுவநுமபி
சுலவஞசோலேயு மாதருந தூறறுவவலர்கள
குலவுமபொயகையு மனேகளுங குறைபடாவன்னம் (௪0)

ஊடினுரொறி கலன்களு மயமனேயுடன்பந
தாடினுர பரியாரமு மடியினுற்சிறறில்
சாடினுரொடு வெகுண்டுகண டதும்புமுத்திரைபய
வாடினுரபரி சிதறில மாலேயுஙகுப்பை. (௪௧)

ஐயவென்னுரை வாய்பின தாருமோவடிய
நெய்யமாமணி வரிவலே விறகுவிறறுழன்றோன்

(௩௬) பருமம - கவசம். செயபொருள - உண்மைப்பொருள.
தானநீர - மதநீர் - தத்தஞ்செய்யுநீர்.

(௩௭) பரிய மின்பயோதாரம்-மேகத்தைசசுமககுஙகால- அரிய.
பசுமை, மினன - மின்னல், பயோதாரம் - மேகம். எனவும பெண்க
ளாககுறிககுஙகால் - அரிய - இல்லாத, மின் - இடை, பயோதரம-
கொஙகை. எனவும், பொருள்கொள்க. முரசு - நணடு மத்தளம்.
கொடிகள் - துவசஙகள - கொடிபோன்றபெணகள்.

(௪௨) ஐய - வியப்பிடைசசொல்.

பொய்யில்வேதமுந் சுமந்திடப் பொருதகன்றார் தந்
செய்யதாண்மலர் சுமந்திடத் தவஞ்செய்தசெருககள் (சஉ

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தோரணநிரை மென்காஞ்சி சூழ்நிலைநெடுந்தோல்குற்
பூரணகும்பக கொங்கைப் பொருவின்மங்கலமாமங்கை
தாரணிந் தாரந்தூக்கிச சந்தகிறுமிர்ந்துபாலிச
சீரணிமூலை வெண்மூரல் செய்துவீற்றிருக்குமன்றே. (சங

திங்களைச சுண்ணஞ்செய்து சேறுசெய்தாட்டியன்ன
பொங்குவெண் மாடப்பந்தி புண்ணியம்பூசுந்தொண்டர்
தங்கண்மெய வேடந்தன்னைத் தரித்தனசாலக்கண்கொண்
டங்கணன் விழவுகாண்பா னடைந்தனமிடைந்தவன்றே. (சச

தேரொலி கலினப்பாய்மான் சிரிப்பொலிபுரவிபூண்ட
தாரொலி கருவியைந்துந் தழங்கொலிமுழக்குகைய்யான்
பேரொலி யெல்லாமொன்றிப் பெருகொலியன்றியென்றுங்
காரொலி செவிமடாது கடிமணிமாடக்கூடல். (சரு

பரத்தையர் வீதி.

இழிபவருயர்ந்தோர்மூத்தோ ரிளையவர்கழியாநோயர்
கழிபவர்யாவரேனுங் கண்வலைபபட்டுநெஞ்ச [
மழிபவர்பொருள்கொண்டெள்ளுந்தெண்ணெய்போலனைந்துசாட்
பழிபடுபோகம்விற்பா ராவணப்பணபுசொல்வாம்.

மெய்படுமன்பினோர்போல் விருமபினோர்க்கருத்துந்தங்கள
பொய்படுமின்பம்யார்க்கும் புலப்படத்தேற்றுவாரபோன்
மைபடுகண்ணார்காமன் மறைப்பொருள்விளங்கத்தீட்டிந
கைபடச்சுவராய்த்தோன்றச சித்திரங்காணச்செயவார.

திருவிற்கான்மணிப்பூகைம் பலகையாத்தெண்மூத்தார
வருவிக்கால்வரைமென்கொங்கைச ...தொட்டியாடிவென்று
மருவிக்காமுகரைத்தங்கள் வடிக்கண்வேன்மாரபந்தைப்பக்
கருவிசூதாடிவென்றங் கைப்பொருள்கவர்தல்செயவார்.

---

(சச) புண்ணியம்-விபூதி. (சரு) கருவியைந்தாவன-தோறக...
யி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சககருவி, மிடற்றுக்கருவி.

(சசு) பழிபடுபோகம்-என்றதை, பொதுநலத்தார் புன்னல...
தோயார் மதிநலத்தின், மாண்டவறிவினவர். என்னுஞ்செயயுள...
னுணர்க.

(சஅ) வடிக்கண் - மாவடுவின்பிளவையொத்தகண். திருக்கோ
வையார்-"வடிக்கணிவைவஞ்சி, யஞ்சு மிடையிது" என்னும் பாசு

தண்பனிநீரிற்றோய்த்த மல்லிகைத்தாமநாற்றி
விண்படுமதியநீண்டும் வெண்ணிலாமுற்றத்திட்ட
வண்படையணைமேற்கொண்டு காமனுங்காமுறவெய்தப்
பண்பலபாடிமைந்த ராவியைப்பரிசில்கொள்வார். (சகூ)

குரும்பைவெம்முலையிற்சிந்து சாந்தமுங்குழலிற்சிந்து
மரும்பவிழ்மாலைத்தாது மளிந்காந்தெசசிலாகிப்
பொரும்பரிக்காலிற்றுளாயப் போயயாதர்மெய்யு
மிருங்குழற்காடுஞ்சூழ்போ யியன்மணம்விழுங்குமன்றே. (ருO)

ஆலவாயுடையானென்று மங்கயற்கண்ணியென்றுஞ்
சோலைவாழ்குயிலனல்லார் சொல்லியாங்கொருங்குசொல்லும்
பாலவாங்கிளிகளபூவை பன்முறைகூரவனேது
நூலவாய்ச்சந்தைகூட்டி நுவன்மறைசிறாரையொத்த. (ருக)

ஒளவியமதர்வேற்கண்ணா ரந்தளிர்விரனடத்துந்
திவ்வியநரம்புஞ்செவ்வாயத் தித்திக்குமெழாலுந்தம்மிற்
கௌவியநீரவாகிக் காளையர்செவிக்காலோடி
வெவ்வியகாமப்பைங்கூழ் விளைதரவளர்க்குமன்றே. (ருஉ)

கட்புலனுதியைந்து முவப்புறக்கனிந்தகாமம்
விட்புலத்தவரேயன்றி வீடுபெற்றவரும்வீழ்ந்து

---

ரத்தில், வடி-என்பது வடுவின் வகிருக்கோர்பெயரென, நச்சினார்க்கினியரெழுதிய வுரையானுமுணர்க.

(ருO) இயன்மணம் - என்றது, தெய்வப்பெண்கள் சரீரங்களும், கூந்தல்களும், இயல்பாகவே மணமுடைமையின். அதுபோலவே இந்நிலமாதர், சரீரமுங்கூந்தலும், இயல்பாகவே மணமுடையனவென்றதை "கொங்குதேர்வாழ்க்கை" யென்னுந் திருமுகப் பாசுரத்தானுமுணர்க.

(ருக) நூல்அவாய் - வேதத்தைவிரும்பி. சந்தைகூட்டல்-ஆசிரியர் கூறிய வேதவாக்கியங்களை ஒருசேரச்சொல்லுதல்.

(ருஉ) திவ்ய - திவ் - சொர்க்கத்தில், ய - பிறப்பது. எனவே, தெய்வத்தன்மையுடையதென்பதுபொருள். நரம்பென்றது,இணை. கிளை, பகை, நட்பு என்னும், யாழிற்குரியநால்வகை நரம்பினை, குரல், துத்தம் முதலிய எழிசையினையும், வீணைகளி னரம்புகளென்பது மொன்று. எழால் - கண்டத்தொனி.

பெட்பமுற்றமுதுங்கைப்பப் பெருங்குலக்சற்பினூர்போ
னட்பிடைப்படுத்திவிற்கு கல்லவரிருக்கையீதால். (ருஉ

வேளாளர் வீதி.

வழுக்கறவாய்மைமாண்புங் கங்கைதன்மரபின்வந்த
விழுக்குடிப்பிறப்புமூவ ரேவியவினைகேட்டாற்ற
மொழுக்கமுமமைசசாய்வேந்தர்க் குறுதிசூழ்வினையுங்குன்று
விழுக்கறுமேழிசசெல்வர் வளமறுகியம்பலுற்றும். (ருச

வருவிருந்தெதிர்கொண்டேற்று நயனுரைவழங்குமோசை
யருகிருந்தடிசிலூட்டி முகமனன்கறையுமோசை
யுரைபெறுதமிழ்பாராட்டு மோசைகேட்டுவகைதுள்ள
விருந்தியவிக்குமோசை யெழுகடலடைக்குமோசை. (ருரு

அருந்தினாருந்திசசெல்ல வருந்துகின்றருமாங்கே
யிருந்தினிதருந்தாகிற்க வின்னமுதட்டுப்பின்னும்
விருந்தினர்வாவுநோக்கி வித்தெலாம்வயலில்வீசி
வருந்திவிண்ணேக்குமோரே ருழவர்போல்வாடிகிற்பார். (ருசு

வானமுந்திசையும்பொங்கும் புகழ்மையும்வானம்பேறு
ஞானமும்பொறையுங்குன்று நன்றியுமூக்கப்பாடு
தானமுங்கொடையுமன்பும் வரிசையுந்தகைசாணண்பு
மானமுந்தவஞ்செய்தீன்ற மகவுபோல்வளர்க்கவல்லார். (ருஎ

வணிகர் வீதி.

புல்லியோர்பண்டங்கொள்வார் வினவினப்பொருடம்பக்க
மில்லெனினினமாயுள்ள பொருளுரைத்தெதிர்மறுத்து
மல்லதப்பொருளுண்டென்னின் விலைசுட்டியறுத்துநேர்ந்துஞ்
சொல்லிலுமிலாபங்கொள்வார் தொன்மரபிருக்கைசொல்வாம். (

கலிநிலைத்துறை.

நீலவேதிமேற்பளிங்கினெ னிழற்சுவர்சிறிதுமின்
காலவாலியவைரவாட் காளிரைத்தும்பர்க்

---

(ருஉ) அமுது - தேவருணவு - மோட்சம். ஆதலால் விண் ...
கைத்தவர் அமுதுகைப்பனவும், வீடுபெற்றவர் மோட்சங்கைப்
எனவும், பொருள்கொள்க. நல்லவர் - கணிகையர்.

(ருச) மூவர் - அந்தணர், அரசர், வைசியர். சேர சோழ பாண்
டியரென்றுங் கூறுவர்.

(ருஎ) வரிசை - தத்தமக்குற்றநிலையிற்றவராமை.

(ருக) உம்பர் - மேலிடம். இயற்றின, படுவிகுதி தொக்குநின்
ற செயப்பாட்டு வினைமுற்று.

கோலவாணிலாசசொரிமணி குயிற்றிவெண்மாட
மாலைபோல்வகுத்தியற்றின பீடிகைமறுகு (௫௯)

(க) திரையளிப்பவுந்திரைபடு நீமபுனல்வேலிக
(உ) கரையளிப்பவுஙகரையிலா னிரைபடுகானக
(ங) தரையளிப்பவுநதரைகிழித் தூன்றிவிண்டாஙகும
(௪) வரையளிப்பவும்வாஙகிவாய மடுப்பனமாடம (௬0)

கரியகம்பலக்கிடுகின்மேற் கதிர்விடுபவளத்
தெரியல்பொன்னரிமாலிகை தெண்ணிலாசசொரியும்
பரியபித்திலமணிவட மரகதப்பசுந்தார்
விரியவிட்டனவிந்திர வின்னிரையனைய. (௬௧)

நாள்களுங்குளிர் திஙகளு ஞாயிறுமேனைக
கோள்களுஙகுளிர்விசும்பொரீஇக குடிபுகுந்தாஙகு
வாள்கிடந்திராப்பகலொளி மழுககலால்வணிக
நாள்கலமபகர்பீடிகை துறக்கநாடனைய. (௬உ)

பன்னிறத்தபல்பெருவிலைப் பட்டெலாமவண
வன்னபட்டின்மேம்படுவிலைப் பருததியுமவண
வெந்நிலத்தரும்பொருள் பதினெழுபுலவணிகர்
மன்னிருக்கையுமருமபெறல் வளனெலாமவண. (௬ங)

மரகதத்திரளம்மிகள் வைரவாளுலக்கை
பரல்கள்வெள்ளியா லடுப்பகில்விறகுலைபனிநீ
ரரிசிமுத்தழல்செம்மணி யடுகலன்பிறவு
மெரிபொனுலிழைத் தாடுபயிவர்சிறுமகளிர். (௬௪)

செயிரிற்றீர்ந்தசெம் பொன்னிறுற்றிண்ணிலைக்கதவம்
அயிரத்தாழுடைத் தவர்கடைவாயிலுமென்று

(௬0) க. உப்பு, முத்து. பவளம, சஙகு, ஒககோலை-ஆக-௫.
உ. செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ்விளநீர்-ஆக-௫.
ங. தேனடை, தேன், மயிற்பீலி, அரக்கு, நாவி-ஆக-௫.
௪. மிளகு-கோட்டம், அகில், தக்கோலம், இலவஙகம்-ஆக-௫
(௬க) கரியகம்பலம் - கறுப்புக்கம்பளம். இடுகு-சட்டம.
(௬உ) பீடிகை - கடைவீதி. (௬ங) பட்டு, பருத்தி, இவை ஆடையாகிய காரியத்தின்மேல் நிற்றலால் காரியவாகுபெயர்கள்.
(௬௫) செயிரிற்றீர்ந்த செமபொன் என்றது - ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம் என்று நால்வகைப் பொன்னுளுயாந்த சாம்புநதத்தை. அயிர்-குற்றம். இசைப்பதை-இதில்-ஐ-சாரியை.

லயிரிற்றீர்ந்தபோறிஞரு மனையர்தஞ்செல்வத்
தியலிற்றுமெனவரையூத் திசைப்பதையெவனே. (௬௫)

எரிக்குறும்பொறியனையசெம் மணிசுடரொறிபொன்
வரிசகுரும்புநேர்மாகத முத்துவாள்வைரந்
தெரிப்பருந்துகிர்சிந்தின செல்லுநாளொன்றக்
கரிப்பர்கையகப்படுவன வாயிரத்திரட்டி. (௬௬)

பாயதொன்மரப்பறவைபோற் பயன்கொள்வான்பதினெண்
டேயமாந்தருங்களந்த சொற்றிரட்சிதான்றூய
மாயைகாரியவொலியன்றி வான்முதற்கருவி
ஞயகாரியவோசையே யாய்கிடந்தன்றே. (௬௭)

ஒழிவில்வேறுபல்பொருளுமே ழுலோகமும்பிறவும்
வழுவில்வேறுபல்கலைகளு மரபுளிவகுத்துத
தழுவிவேண்டினர் தாஙகொளத்தககவாபகரா
வழிவிலாமறை போனறன வாவணவீதி. (௬௮)

நிகசெலாம்புகழ் மதுரையைசிவபுரமாககி
முககணுயகனரசுசெய முறையினுக்கேறபத
தக்கதோழனே டளகைமாககுறைதயகக
மொக்குமநகர் வாணிகருறையுள்சூழ்நியமம். (௬௯)

---

(௬௬) குறுமை - சிறுமை. சிந்தின, அகப்படுவன, வினையால ணையும் பெயர்கள், எரிசகுறுமபொறி, சிறியதீப்பொறி. அரிப்பா- அரித்துப்பொருள் தேடுவோர்.

(௬௭) தூயமாயை - சுத்தமாயை. தூயமாயைகாரியவொலி-அக்ஷ ரங்களின்வடிவாய்ப் பொருள்பயப்பது. இதை, "மொழிக்காரண மாநாதகாரியவொலி, எழுத்து" என்பதனுலு முணர்க. வான்முதற கருவிஞய காரியவோசை, பொருள்பயக்கும் அக்கரவடிவைப்பெறா து, பஞ்ச பூதங்களின் காரியப்பாட்டா லெழும், அநுகாரணவோ சை. தொன்மரம் - ஆலமரம்.

(௬௮) பல்பொருள் - பலபண்டங்கள் - அறமுதலிய வுறுதிப் பொருள்கள். ஏழுலோகம் - பொன், வெள்ளிமுதலியன - பூலோக ம், புவலோகமுதலிய ஏழுலகம். பல்கலைகள் - பலஆடைகள் - அறு பத்துநான்குகலைகள். பகர்தல் - விற்றல் - அறிவித்தல்.

(௬௯) தயக்கம் - தோற்றம். நியமம் - கடைவீதி.

மன்னவர் வீதி.

ற்றையாழியானுலகிருளொதுக்குமாபோலச
சற்றநேமியாற் கலியிருடின்றுகோலோச்சி
ற்றடம்புய வலியினான்மாறடுசீற்றக்
கொற்றமன்னவர் விழுக்குடிக்கோமறுகுரைப்பாம். (௭0)

ரககவேலைகடம்மையே தாளுறப்பிணித்துத்
ங்கமாவெனத்தொகுத்த மந்திரம்பலவருவி
ஙகுமோரறிவுயிர்வரை யாவையும்பெயர்த்து
ஙகொல்யானைபோற் பிணித்தகூடம்பலமன்றே. (௭௧)

ழுங்கள்வசசிரங்கார்முகம் வாளிமுக்குடிக்
ழுங்கள்சக்கரமுடம்பிடி கப்பணநாஞ்சி
லழுக்கணுந்தகம்பலகைதண் டிவைமுதற்படையின்
ழுக்களோடிகல்விந்தைவாழ் கூடமும்பலவால். ( )

லையகல்லைமாவெனக்கொண்டு சுழற்றியுஞ்செச்சர
லையும்யானைபோற்பாய்ந்துமல் லாற்றியுமாற்றல்
லையவாளொடுகேடகம் வீசியும்வென்றி
லையாடமர்பயில்வன வெண்ணிலாககூடம். (௭௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தசவிர்நீலமாடஞ் செம்மணிசசென்னிமாடங
ரசறுகனகமாடஞ் சந்திரகாந்தமாட
ரசறவிளங்குநின்ன மாடநீண்யாலைகூடற்
ரசிழைமடந்தைபூண்ட பன்மணிக்கோவையன்ன. (௭௪)

ரையகல்கதுப்பினல்லார் வீங்கிளங்கொங்கைபோழ்ந்த
ரையகன்மார்பமன்றி வடுப்படார்தமக்கன்பில்லா
துரையகன்மாணவாற்று லொழுகுவார்பலகையொள்வாட்
ரையகல்விஞ்சைவீரர் கணம்பயில்காட்சித்தெங்கும். (௭௫)

ன்னைவாளென்னவீசி வீஙகுகார்தம்மிற்போர்மூண்
டன்னவாள்மருப்புநீட்டி யெதிரெதிர்புதையக்குத்தி
மன்னவாளென்னவாய்விட் டதுவெனசசெந்நீர்சோரப்
பொன்னவாமகன்றமார்பர் பொருகளிறூட்டுவார்கள். (௭௬)

---

(௭0) கோல் - நீதிமேனிற்றலா லுவமையாகுபெயர்.

(௭௧) மந்துரை - குதிரைலாயம். கூடம்-யானைக்கட்டுமிடம்.

(௭௨) விந்தைவாழிடம் - துர்க்காதேவிவாழுமிடம், அதாவது-ண்டு, ஆயுதசாலை.

தூண்டுவாருள்முந்தங்கள் பின்னிடத்துவக்குண்டார்த்துத்
தாண்டுமாவொற்றையாழித் தேரினுந்தள்ளித்துள்ளப்
பாண்டில்வாய்ப்பசும்பொன்றேயப் பார்மகண்முதுகுகிண்டு
சேண்டிசைபோய்மடங்கச செல்வத்தேர்நடத்துவார்கள். (எ

மைந்தர்தந்நெருக்கிற்சிந்து கலவையுமகளிர்கொங்கைச
சந்தமுங்கூந்தல்சோர்ந்த தாமமுஞ்சிவிறிவீசு
சிந்தூரப்பொடியுநாறத் தேனொடுமெழுந்துசெந்தூ
ளந்தரவயிறுதூர்ப்ப வடுபரிநடத்துவார்கள். (எ

தம்முயிர்க்கிரங்காராகித் தருக்கொடுமானமீர்ப்பத்
தெம்முனையெதிர்ந்தாராற்றுஞ் செருவெனக்குருதிசசெங்கேழ்க்
கொய்ம்மலர்க்குடுமிசசேவல் கோழினந்தகர்போரமூட்டி
வெம்முனைநோக்கிநிற்பார் வேறவற்றூறுநோக்கார். (எ )

பெண்முத்தமனையபேதைச சிறுமியர்பெருநீர்வையை
வெண்முத்தமிழைத்தசிற்றில் சிதைபடவெகுண்டுநோக்கிக்
கண்முத்தஞ்சிதறச்சிந்துங் கதிர்முத்தயாலைதட்பத்
தெண்முத்தினகைத்துசசெல்வச சிறார்கடேருருட்டுவார்கள். (அ0)

கொடிமுகிலுழாவுமிஞ்சிக் கோநகர்வடகீழ்ஞாங்கர்
முடிமிசைவேம்புநாற முருகவிழாரும்போந்து
மடிமிசைநாறத்தென்னர் வழிவழியரசுசெய்யு
மிடிமுரசுறங்காவாயி லெழுநிலைமாடக்கோயில். (அக)

மறையவர்வீதி.

ஆத்திகருண்டென்றோது மறமுதற்பொருள்கணான்கு
நாத்திகம்பேசும்வஞ்சர் நாவரிகருவியாக
வாத்தனுரைத்தவேத வளவுகண்டுள்ளந்தேறித்
தீர்த்தராய்முத்திவேட்குஞ் செல்வர்தம்மிருக்கைசொல்வாம். (அ )

முஞ்சிநாண்மருங்கின்மின்னப் பொன்செய்தமுளரிவேய்ந்த
குஞ்சிநான்றசையத்தானைச செருக்குமுன்கொய்துதூங்கப்

(எகூ) தருக்கு - வீரச்செருக்கு. முனை - யுத்தம்.

(அக) முடிமிசைவேம்புநாற, என்றது, பாண்டியர்க்கு வேப்ப மலர்மாலை உரியதாதலின். ஆர் - ஆத்திமாலை, போந்து - பனைமாலை

(அஉ) ஆத்திகர் - கடவுளுண்டென்பவர். நாத்திகர் - அறமுதலிய வுறுதிப்பொருள்களில்லையென்றும், மகளிரின்பமே முத்தியென்றுங்கூறும் உலோகாயதன்முதலியோர். அளவு - அனுமானமுதலிய பிரமாணங்கள். தீர்த்தர் - பரிசுத்தமுடையவர்.

ஞ்சிநாண்கலைத்தோன்மார்பும் பலாசக்கோல்கையுந்தாங்கி
யஞ்சிநான்மறைநூல்கற்போர் கிடைகளேயில்லமெல்லாம். (அ௩)

வினையந்தணளர் சிறார்பயிறெய்வவேத
வுருவேற்றக்கேட்டுக் கிளிகளோநவிலும்வேற்றுப்
வையும்பயின்றுபுத்தே ளுலகுறைபுதுயந்தாயக்
ாயுறைகிளிகட்கெல்லாங் கசடறப்பயிற்றுமன்றே. (அ௪)

வதமுமங்கமாறு மிருதியும்புராணநூலின்
பதமுந்தெரிந்தோராலும் பிறமதங்களையவல்ல
ாதமுமதமேற்கொண்டு மறுத்தலுநிறுத்தவல்ல
பாதமுமுடையோராலும் பொலிந்தனகழகமெல்லாம். (அ௫)

றிபொதிகரகக்கைய ரொளிவிடுசெங்கற்றோய்த்த
பறுவையருயிர்க்கூறஞ்சு நடையினரவிசசைமாள
வெறிசுடர்மழுவாளென்னக் கோவணமார்த்தகோலர்
மறைமுடிவன்றித்தேறா மாதவர்மடங்களெங்கும். (அ௬)

அட்டில்வாய்ப்புகையுமாடத் தகில்படுபுகையும்வேள்வி
யிட்டெழுபுகையுமொன்றி விரிசுடர்விழுங்கக்கங்குல்
பட்டதுபலருந்தத்தம் பயில்வினையிழக்கநங்கை
மட்டவிழ்கடுக்கையான்கண் புதைத்தநாண்மானுமன்றே. (அ௭)

சைவர்வீதி—கலிநிலைத்துறை.

தெய்வநீறமைந்தெழுத்துமே சிதைக்கலனாக
வெவ்வமாசிருவினையுடம் பெடுத்துழலப்பிறவிப்

---

(அ௩) பஞ்சிநாண - உபவீதம். கலைத்தோல் - கிருஷ்ணாஜினம். கிருஷ்ணம் - மான், அஜினம் - தோல். எனவே கிருஷ்ணசாரமென்னு மொருவிதமானின்தோல், என்பதுபொருள். பலாசம் - முண்முருக்கு. கிடைகள் - வேதாத்தியயன பாடசாலைகள்.

(அ௫) அங்கம் ஆறாவன - மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம். மதமேற்கொண்டு மறுத்தலாவது - அவ்வவர் மதத்திற்கூறும் பந்தமுத்தியிலக்கணங்களை மேற்கொண்டு, பிரமாணம், பிரமேயம், பிரமாதா, பிரமிதி என்னும் நால்வகை இலக்கணங்களுள் ஒன்றோடொன்று வழுப்படக்கூறும் விகற்பங்களை யெடுத்துக்காட்டி விலக்குதல். நிறுத்தவல்லபோதமாவது - தந்தம்மதமேற்கொண்டு களைந்து சித்தாந்தத்தை நிறுத்தல்.

(அ௬) அறுவை - வஸ்திரம். அவிசசை - மாயை.

(அ௮) சிதை-பாய்மரம். சிதைக்கலன்-சிதை-பாய்-கலன், மரக்கலம். பிறவிப்பௌவ மேழென்றது-தேவர், மானிடர், விலங்குகள், பறவைகள், நீர்வாழ்வன, ஊர்வன, தாபரங்கண்முதலியஎழுபிறப்பினை.

ல்செய்வண்டுகற் பகமதுக்கொணர்ந்துவந்தூட்டித்
ழ்ந்செயகாமமென் பேடையினு டனேயதணிக்கும். (௯௫)

ருநீர்க்கடலன் றதுவெனநிறையசழ்சா
ருமாழியன் றதுவெனவோஙகெயிலெட்டாய்ச
ருநேமியன்றறுவெனச சமைந்தகோபுரம்பொன்
மருவன்றதுவெனசசுடர் விசும்பிழிவிமானம். (௯௬)

வதவந்தமுந்துளக்கற மெய்ப்பொருள்விளங்கு
தவந்தமுங்கடந்ததோர் நடுநிலைப்பொருளின்
ாதவந்தனைப்பத்தியின் பாலராய்ப்பயில்வோர்
ாதவந்தருபயனெனத் தழைத்தபல்வளனும். (௯௭)

பாறிகளைந்திறுக்கூட்டுபல் போகமுமிதப்பச
சறிகொணீரவாறுவப்பவத் திருநகர்மாக்க
ணறிகொள்செஞ்சடைப்பிறைமுடி நிருமலக்கொழுந்தின்
வறிகொளுண்மலரடிதழீஇ வீடுபெற்றார்போல். (௯௮)

ன்னவன்னபசிருக்கையா லந்நகர்முளரிப்
பான்னையீன்றதாலதுபல பொருணிறைசெல்வந்
ன்னையீன்றதாலதுபல தருமமென்றுரைக்கு
ன்னையீன்றதஃதீன்றதால் விழுத்தகுபுகழே. (௯௯)

ழுக்கடந்ததோருருத்திர வுலகமென்றியாரும்
புழுத்தநின்றவிந்நகர்வயி னும்பரின்மாண்ட
பிழுத்தகும்பலசெல்வமும் வியந்துபார்த்துள்ளத்
முழுக்கருமையாலின்னமு மமரர்கணுறங்கார். (௧00)

மையவிழ்ந்ததார்மீனவர் வாகைவேல்விடுத்துத்
ரையைவென்றதுமுடிதகர்த் திந்திரன்செருக்குக
ளையவென்றதுஙகார்தளை யிட்டதுங்கனக
மரையைவென்றதும்நகர் வலியினாலன்றே. (௧0௧)

ங்குநாவுமாயெங்கணுங் கண்ணுமாயெங்குந்
ங்குபேரொளியல்லதித் தனிநகர்சசெல்வஞ்

---

(௯௬) காருருமாழியென்றது - மேகங்கள்தவழுஞ் சக்ரவாளகி ரியை. ஆழி - சக்கரம். எட்டாய்ச்சாருநேமி - அஷ்டகுலபர்வதங்க ளிலொன்றாயுள்ள ஒருபர்வதமெனப்பொருள்தந்து நிற்றலால், பன் மையொருமைவந்த பால்வழு வமைதியன்று.

(௯௭) வேதஅந்தம் - உபநிடதங்கள் - நாத அந்தம் - நாதத் துவத்தின் முடிவு.

செங்கணாயிரநாவினான் செப்பவுமெதிர்கண்
டங்கணாயிரமுடையவ னளக்கவும்படுமோ. (௧௦

புண்ணியம்புரி பூமிபாரதில்வருபோக
நண்ணியின்புறு பூமிவானுடெனபநாளும்
புண்ணியம்புரி பூமியுமதில்வருபோக
நண்ணியின்புறு பூமியுமதுரைமாநகரம். (௧௦௩

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பண்கனிந்தனையசொல்லார் நரப்பிசைப்பாணிதேவ
ருண்கனியமுதுங்கைப்பச் செவிதுளைத்தூட்டவுண்டும்
பெண்களினமுதமன்னார் பெருமிதநடனமுண்ணக்
கண்களைவிடுத்துங்காலங் கழிப்பவரளவிலாதார். (௧௦௪

கலவிவித்தாகவூடிக் கட்புனல்குளிக்குநல்லார்
புலவிதீர்செவ்விநோக்கிப் புணர்முலைப்போகந்துய்த்து
நிலைநிலையாமைநோக்கி நெறிபடுதருமதானங்
கலைஞர்கைப்பெய்துங்காலங் கழிப்பவரெண்ணிலாதார். (௧௦

சந்தித்துமீனநோக்கி தலைவனைமூன்றுபோதும்
வந்தித்துமீசன்பூசை மாபுளிமுடித்தும்வேத
மந்தித்துமறியான்செப்த திருவிளையாடல்கேட்டுஞ்
சிந்தித்துமன்பர்பூசை செயநுநாள்கழிப்பார்பல்லோர். (௧௦௬

கற்பவைகற்றுங்கேட்டுங் கேட்டவைகருத்துளூறச
சொற்பொருணினைந்துங்கேட்போர்க் குணர்த்தியுட்டெளக்கந்தீர்த்து
மெற்பகலிரவுநீங்கு மிடத்துமெய்யறிவானந்த
வற்புதவெள்ளத்தாழா தாழ்ந்துநாள்கழிப்பார்சில்லோர். (௧௦௭

தன்னிகருயர்ச்சியில்லான் காப்பியத்தலைவனாக
முன்னவர்மொழிந்ததேனோர் தமக்கெலாமுகமனன்றோ

---

(௧௦௨) ஆயிரம்நாவினான் - ஆதிசேடன். கண்ணாயிரமுடையவ
ன் - இந்திரன்.

(௧௦௩) போகம் என்றது-பெண்-ஆடை, அணிகலம், போசன
ம், தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமளிஎன்னும், அஷ்ட போகங்
களை.

(௧௦௫) புலவி - ஊடல். நிலை நிலையாமை என்றது - தோற்ற
க்கேடுகளை.

(௧௦௬) மூன்றுபோது - காலை, மாலை, உச்சி. அந்தித்தல் - சந்
தித்தல்.

(௧௦௭) பகலிரவு என்றது - சகலகேவலங்களை.

(௧௦௮) காப்பியம் - கவியாற்புனையப்படுவது - கவி, தன்னாற்பு
னையப்படுங் காப்பியத்தின் மேனிற்றலிற் கருவியாகுபெயர்.

ன்னதுதனதேயாகு மண்ணலேபாண்டிவேந்தா
பிநகர்க்கரசனுவா னிக்கவிக்கிறைவனுவான். (௧௦௮)

என்னெனவுரைப்பேனிந்த விறைமகன்பண்பையேனை
மன்னவர்வானோர்போல மதித்துரைவிரிக்கற்பாற்றோ
ன்னவனுணையாற்று னடப்பதிவ்வகிலமென்றுன்
முன்னவன்செய்தவாடல் வரவினைமுறையிற்சொல்வேன் (௧௦௯)

## மதுரைத்திருநகரப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௩ - க்கு - திருவிருத்தம் - ௧௧௧.



## திருக்கைலாசப்புகழ்ச்சி.

கலிநிலைத்துறை.

ரங்கடந்தருளெனமுதுவானவர்முனிவோர்
ரங்கடந்தலைமுகிழ்த்திடக்கருணைசெய்தவிச்சை
ரங்கடந்துரையுணர்வெலாங்கடந்தருமறையின்
ரங்கடந்தவனிருப்பதுதிருக்கயிலாயம். (௧)

ரந்தராதிவானவர்பதம்போதுறைபுத்தேள்
ரந்தவான்பதஞ்சக்கரப்படையுடைப்பகவன்
ரந்தவாதுவாழ்பதமெலாநிலைகெடவருநா
நரந்தவாதுநின்றூழிதோறோங்குமவ்வோங்கல். (௨)

ரம்பைமாதராராடலினரவமும்பாட
ரம்பிறேசையுமுழவதிர்சும்மையுநால்வாய்
ரம்பிலோதையுமருவிவீழொலியுமாறாது
ரம்பிவானமுந்திசைகளுநிமிர்வனமாதோ. (௩)

---

(௧௦௯) வரவு-என்னுந் தொழிற்பெயர், பன்மைப்பொருண்மே னின்றது.

(௧) அவிச்சை - பாசம்.

(௨) ஊழிஎன்பதன்முதலில் அகரச்சுட்டுதொகுத்தல்.

(௩) நால்வாய்-யானை. இது தொங்கியசையும் வாயையுடைய தனைப், பொருண்மே னிற்றலால், வினைத்தொகை நிலைக்களத்துட றந்த அன்மொழித்தொகை நிலைத்தொடர். நரம்பு-வீணைமே னிற்றலால் தானியாகுபெயர்.

வெந்தநீற்றொளிவெண்மையும்விமலனையகங்கொண்
டந்தமின்றியேயசைவறவிருக்கையுமருவி
வந்தகண்களுநகொண்டவணிருக்குமாதவர்க்குத்
தந்ததாலரன்கைலையுந்தனதுசாரூபம். (௪

ஆநகுவெண்டுகில்விரித்தெனக்கல்லெனவார்த்து
வீநகுகாலருவித்திரள்வெள்ளமேயன்றி
யோநகுநான்மறைக்குடுமியினுள்ளொளிநோக்கித்
தூநகுமாதவர்கண்களுஞ்சொரிவனவெள்ளம். (௫

கோட்டுமாமலர்சிலமலர்குண்டுநீரொடுத்துக்
காட்டுமாமலர்கொடிமலர்கொண்டுமுட்கரைந்த
பாட்டுமாமலர்கொண்டுநம்பாஞ்சுடரடியிற்
சூட்டுமாதவர்தொகுதியுஞ்சூழ்வனவொருபால். (௬

கையநாகமுங்காய்சினவுழுவையுங்கடுவாய்ப்
பையநாகமுந்தங்கிளைபாவியமுக்க
ணையனுகமெய்யருந்தவர்தமையடைந்தன்பு
செய்யநாகமும்வையமும்புகழ்வதசிலம்பு. (௭

திருக்கைலாசப்புகழ்ச்சி முற்றிற்று.

ஆ படலம் ௪-க்கு - திருவிருத்தம் - ௨0௬.



## புராணவரலாறு.

---

கலிவிருத்தம்.

அளந்திடற்கரிதாயவக்குன்றின்மேற்
களநகறுத்துவிண்காத்தவன்கோயின்முன்
விளம்பருஞ்சிவதீர்த்தத்தின்மிக்கதாய
வளம்பெறுஞ்சிவதீர்த்தத்தின்மாடது. (௧

---

(௪) அந்தம்-முடிவு. அகம் - மனம் - இடம். கண் - கண்கள் இடம். அவண்-அவ்விடம். சாரூபம்-சமானமானரூபம்.

(௫) ஆநகல் - நேயத்தழுந்தல். சொரிவன, என்னும் வினைமுற்று, பெயரெச்சமாய் நின்றது. வெள்ளம் - நீர்ப்பெருக்கு - ஆநந்தபாஷ்பம்.

(௬) கரைந்த, முதனிலை திரியாதுவந்த பிறவினைப் பெயரெச்சம்-இதுகரைக்குமென எதிர்காலப்பொருண் மேனின்றது.

(௧) சிவதீர்த்தத்தின்மிக்கது-சிவனுடைய தீர்த்தங்களிலேயுயர்ந்தது. மாடு-பக்கம்.

தண்டருங்கதிர்சசந்திரகாந்தத்திற்
பண்டயங்கநவமணிபத்திசெய
தண்டர்தசசனனேகதவஞ்செய்து
கண்டதாயிரக்கான்மண்டபமரோ. (௳)

ஆனபான்மையிஞலந்தமண்டப
ஞானநாயகனுண்மலர்த்தாடொழு
வானமீனெடுவந்துபதங்குறித்
தானமின்மதிவைகுவதொத்ததே. (௨)

அன்னமண்டபந்தன்னுளருந்தவ
மென்னவேஙகையதன்மேலிருந்தன.ர
பன்னுகேள்விப்பதினென்புராணமுரு
சொன்னமாதவசகூதமுனிவனே. (௩)

அந்தவேலையிலசிவதீர்த்தத்தில்
வந்துமூழ்கியம்மண்டபத்தேறியே
சந்தியாதிதவமுடித்தீறிலா
விந்துசேகரன்றுணிவனந்தேத்தியே. (௪)

சம்புபத்தன்சதானந்தனுத்தம
னம்புயத்தனனயமகோதர
னும்பரஞ்சியவுக்கிரவீரிய
னம்புகேள்விப்பிரசண்டநற்றவன் (௫)

ஆதிமாதவர்யாவருமன்புமை
பாதியாய்முற்றுமாகும்பராபரச
சோதிபால்வைத்தசூதனைத்தோத்திர
மோதியஞ்சலிதொன்றுவினுவினுா (௬)

(௨) பதஙகுறித்து-காலம பார்த்து. மதி-மதுவையுடையது.

(௩) வேங்கையதள்-புலித்தோலாசனம்.

(௪) சந்தியாதித்தவம் என்றது, சந்தியாகாலத்திற் செய்யும் பிராணயாமம், மார்ஜனமுதலிய நித்தியகருமங்களை. சந்தி - பகலிராவின் கூட்டக்காலம், இதுவாசசியார்த்தம். அக்காலத்தில் உபாசிக்கும் தேவதையைக் குறிப்பது இலக்கியார்த்தம்.

(௬) ஆதிமாதவர்—யாவரும் உமைபாதியாய முற்றுமாகும்பராபரசசோதிபால் அன்புவைத்த சூதனைத் தோத்திர மோதியெனக் கூட்டிப் பொருள் கொள்க.

கலிநிலைத்துறை.

வேதவாகமபுராணமேமிருதியேமுதலா
வோதுநூல்களின்றுணிபொருளுலகெலாம்பயந்த
பேதைபாகனேபரமெனத்தேர்ந்துணர்பெரிய
போதமாதவவுனக்கியாப்புகல்வதொன்றுளதால். (அ

மேருமந்தரங்கைலைபர்ப்பதமுதல்விடைமே
லூருமந்தரநாடவனுறைபதியனந்த
மாருமந்தமில்போகம்வீடடைவதென்றவற்றின்
காரணங்களோடுரைத்தனைகருத்தினுக்கிசைய. (௯)

ஐயமாதிமுக்குற்றமுமகலநீயருளிச்
செய்யவுந்தெளிந்திலேங்கள்யாஞ்சிற்றறிவுடையே
மையனெஞ்சினேமாகையான்மயக்கறவின்ன
மூய்யுமாறருள்செய்தியென்றுரைத்தனர்மன்னோ. (௧0)

தலங்கடம்மின்மிக்குள்ளதாய்த்தகுதிசாறீர்த்தக்
குலங்கடம்மின்மிக்குடையதாய்க்குறையிரந்தோர்க்கு
நலங்கடந்தருண்மூர்த்தியாய்நாதவேதாந்தப்
புலங்கடந்தபேரொளியுறைதலமொன்றுபுகலாய். (௧௧)

என்றபோதெதிர்முகமலர்ந்திருண்மலவலியை
வென்றசூதனுந்தலங்களின்விசேடமாய்ந்தம்பொற்
குன்றவார்சிலையானிடங்கொண்டுறைபதியு
ளொன்றுகேட்கவீடளிப்பதாயுளதுமற்றதுதான். (௧௨)

---

(அ) தேர்தல் - ஐயந்திரிபறத்தெளிதல். போதம்-ஞானம். உம
க்கு, உயர்வுபற்றி ஒருமையிற் பன்மைவந்த வழுவமைதி.

(௯) பருப்பதம்-ஸ்ரீபர்வதம். அந்தரநாடு-சிவலோகம்.

(௧0) ஐயமாதிமுக்குற்றம்-ஐயம், திரிபு, அறியாமை. இவற்று
ள் ஐயமாவது, ஒன்றில் துணிவுபெறாது நிற்றல். திரிபாவது - ஒன்
றை, மற்றொன்றாகத்துணிதல். அறியாமையாவது - குற்றியை மக
னே எனவும், இப்பியை, வெள்ளியே எனவுந்துணிதல். தெளிந்தி
லேங்கள்-இதில் கள்விகுதி, விகுதிமேல் விகுதியாகவந்த இடவழு
வமைதி.

(௧௧) நாதவேதாந்தப் புலங்கடந்த பேரொளி என்றது, கலை
ஞானங்களை விளக்குமறிவையும், வைகரியாதி வாக்குகள் நான்கின்
மேற்றதாம் தற்போதத்தையும், கடந்து நிற்றலை.

(௧௨) இருண்மலம்-ஆணவமலம்.

முற்றவோதியபுராணமூவாறினுட்காந்தம்
பெற்றதாறுசங்கிதையவையாறுந்தம்பெயராற்
சொற்றபேர்சனற்குமாரமாமுனிவரன்சூதன்
கற்றவார்சடைச்சங்கரன்மாலயன்கதிரோன். (௧௩)

இன்னவாறனுட்சங்காசங்கிதையென்று
சொன்னநூலினையுணர்த்தினன்சங்கரன்றுணைவிக்
கன்னபோதவன்மடியினிலிருந்துகேட்டதனை
மின்னுவேல்பணிகொண்டவேள்வெளிப்படவுணர்ந்தான். (௧௪)

குன்றெறிந்தவேள்வழிபடுகுறுமுனிக்குரைத்தா
னன்றுதொட்டஃதகத்தியசங்கிதையாகி
நின்றதன்னதுகேட்பவர்க்கானடிநீழ
லொன்றுமின்பவீடளிப்பதாவொருதலனுரைக்கும். (௧௫)

அதிகவப்பதியாதெனிலவாய்கேட்கக்
கதியளிப்பதென்றோதியசூதனைக்கதியின்
மதியைவைத்தவரன்னதைப்பகரெனவந்த
விதியினிற்புகல்கின்றனன்வியாதன்மாணாக்கன். (௧௬)

புதியதாமரைமேவியபழமறைப்புத்தேள்
விதியினூற்கடுநடைப்பரிமகஞ்செய்வான்வேண்டிக்
கதியைமாய்ந்தவர்க்குதவுதண்டுறைசெழுகாசிப்
பதியின்மைந்தரோடெய்தினன்பண்டொருவைகல். (௧௭)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அகத்தியன்வியாதனூரதன்சனகனாதிநான்முனிவர்சோதமனூற்
சிகைத்தெளிவுணர்ந்தபராசரன்வாமதேவன்வான்மீகியேவசிட்டன்
சகத்தியல்கடந்தசுகன்முதன்முனிவர்தம்மொடும்பத்துவெம்பரிமா
மகத்தொழின்முடித்துமற்றவர்க்குள்ளமகிழ்வுறவழங்குநவழங்கா. ()

(௧௩) பேர் - பன்மைப்பொருளில்வந்த வோரிடைசசொல்.

(௧௫) குன்று - கிரவுஞ்சமலை.

(௧௬) கதி - மோட்சம்.

(௧௭) பழமறை - படைப்புக்காலந் தொட்டுள்ள வேதங்கள். பரிமகம் - பரி - அஸ்வம் - மகம் - யாகம். அஸ்வமேதயாகம்.

(௧௮) சனகனாதிநால்முனிவர்—சனகர், சனந்தனர், சனற்குமாரர். சகம்-தோன்றியழிவது-உலகம்.

சத்தியவுலகிற்சரோருகக்கிழவன்சார்ந்தபின்புலப்பகைசாய்த்த
வத்திருமுனிவரனைவருங்காசியடிகளையடைந்தனர்பணிந்து [யிற
முத்திமண்டபத்தினறமுதனுன்குமொழிந்தருண் மூர்த்திசன்னிதி
யத்தியாயிருந்துநாரதமுனியைப்பார்த்தொருவினுவுரைபகர்வார். (

தலமுதன்மூன்றுஞ் சிறந்ததோர்சைவத் தலமுரையென்னநா
ரதன்முன், கலைமுழுதுணர்ந்த சனற்குமாரன்பாற் கற்றவன்வியாத
னுமவன்பா, னலமுறக்கேண்மினென்ன வவன்கதிர்வேனம்பியான்
மறைமுதலனைத்து, மலமறவுணர்ந்தோன் குறுமுனியாகு மவனி
டைக்கேண்மெனவிடுத்தான். (௨0)

மலயமாதவனை யடைந்துகைதொழுது வாழ்த்திவாதாவிவி
வலனைக், கொலைபுரிதருமமூர்த்தியேவிநதக் குன்றடக்கியதவக்குன
றே, யலைகடல்குடித்த வருட்பெருங்கடலே யருந்தமிழ்க்கொண்ட
லேதென்பா, றுலைபெறநிறுத்தகளைகணேயென்று சுருதியாயிரமெ
னத்துதித்தார். (௨௧

மூவகைசசிறப்புமுள்ளதோர்தான மொழிகெனமுகமலர்ந்தரு
ள்கூர்ந், தியாவையுமுணர்ந்தோன் முத்திமண்டபத்தி லிருந்
தொகையின்வந்திறக்குஞ், சேவல்கடமையுமங்கரன்றனையுஞ் சே
வலங்கொடியுடைவடிவேற், காவலன்றனையும்வடநிழலமர்ந்த கண்
ணுதற்பரனையும்பணியா. (௨௨)

அங்கயற்கண்ணிதன்னையுமெந்தை யாலவாயானையுமிதய,பங்க
யத்திருத்திச்சமாதியிலிருந்து பரவசமடைந்துபார்ப்பதிக்குச், சங்க
ரனருளிசெய்தசங்கிதையைத் தாருகனுடலிரண்டாகச், செங்கை
வேல்விடுத்த சேவகனெனக்குத்தெருட்டின னனையசங்கிதையில்.

(௧௯) அறமுதல் நான்காவன - அறம், பொருள், இன்பம், வீடு.
அலம்-சுழற்சி.

(௨௧) துலை-துலாக்கோல், நிறுத்த-நிறுத்திய. களைகண் - பற்
றுக்கோடு. ஆயிரம்-அனந்தம்.

(௨௨) சேவல்களென்றது - மாகனந்தனென்னு மறையவனும்,
அவன்மனைவியும், மக்களிருவரும், மூன்றும் யுகத்திற் பாவத்தாற்
கோழிகளாய்ப்பிறந்து முத்திமண்டபத்தில்வந்து முத்தியடைவரெ
ன்று காசிகாண்டத்திற் சொல்லப்பட்ட அக்கோழிகளாம்.

(௨௩) சமாதி-சுகத்துக்கு முதன்மையா யுள்ளது - அசைவற்
றிருத்தல். பரவசமடைதல்-நேயத்தழுந்தல்.

பெறற்கருந்தவஞ்செய்தகந்தெளிந்தரிதிற்பெறுங்கதிகேட்பவர்க்கெளிதா, யுறப்படுந்தலநீர்விளையமூச்சிறப்பு முள்ளதெத்தலத்தினுஞ்சழிந்த, சிறப்பினுங்கெண்ணெண்டிருவிளையாடல் செய்தருள்வடிவெடுத்தென்று, மறைப்பொருள்விளங்குமாலவாயதனை மண்ணின்மேற்சிவனுலகென்னும். (௨௪)

அத்தலத்தனையமூவகைச்சிறப்பு மளவிலாவுயிர்க்கெலாங்கருணை
வைத்தவன்செய்ததிருவிளையாட்டும் வரையுரங்கிழியவேலெடுத்த
வித்தகனெனக்குவிளம்பியவாறே விளம்புவனுமக்கெனவந்த [ன்
வுத்தமமுனிவர்யாவருங்கேட்க வுணர்த்துவான்சடலெல்லாமுண்டா

புராணவரலாறு முற்றிற்று.

ஆக படலம் ௫ - க்கு - திருவிருத்தம் - ௨௩௧.



## தலவிசேடம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நாட்டமொருமூன்றுடைய நாயகனுக்கன்புடையீர் நயந்துநீவீர், கேட்டதலமீண்டுரைத்த திருவாலவாயதனுட் கிளைத்துப்பொன்னாக, தோட்டலர்தாமரைமுளைத்த தொருசடமுஞ் சுந்தரசெஞ்சோதிஞான, வீட்டமெனமுளைத்தசிவ லிங்கமுமொன்றுளதின்னும்சைப்பக்கேண்மின். (௧)

திருவாலவாய்க்கிணையாமொருதலமுந்தெய்வமணஞ்செய்யப்பூத்த
மருவார்பொற்கமலநிசர்தீர்த்தமுமத்தீர்த்தத்தின்மருங்கின்ஞான
வுருவாகியுறைசோமசுந்தரன்போலிகபரந்தந்துலவாவீடு
தருவானுமுப்புவனத்திலுமில்லையுண்மையிதுசாற்றின்மன்னோ. ()

அவ்வகையமூன்றின்முதற் றலப்பெருமைதனைச்சுருக்கியறையக்கே
னெவ்வகையவுலகத்துந்தருமதலமதிகமவற்றீறிலாத [ண்மி
சைவதலமதிகமவற்றறுபத்தெட்டதிகமவைதமிலீரெட்டுத்
தெய்வதலமதிகமவற்றதிகதலநான்கவற்றைச்செப்பக்கேண்மின். ()

---

(௨௪) சழிந்த - மேன்மைப்பட்ட.

(௨௫) மூவகைச்சிறப்பு - மூர்த்திசிறப்பு, தலசிறப்பு, தீர்த்தசிறப்பு.

(௧) தோடு - இதழ்.

(௨) முப்புவனம் - சுவர்க்கம், மத்தியம், பாதலம்.

(௩) தருமதலம் - புண்ணியக்ஷேத்திரம். சைவதலம் - சிவஸ்தலம்.

அன்னமலிவயற்புலியூர்காசிநகர்காளத்தியாலவாயா
மின்னவளம்பதிநான்கிற்றிருவாலவாயதிகமெவ்வாறென்னின்
மின்னவிரம்பலங்காணக்காசிநகர்வதிந்திறக்கவியன்காளத்திப்
பொன்னகரம்பத்தியினல்வழிபாடுசெயவளிக்கும்போகம்வீடு. (௪)

அறந்தழையுந்திருவால வாய்கேட்டவுடன்போகமளிக்குமீண்டு, பிறந்திறவாப்பேரின்பக் கதியளிக்குமிதுவன்றிப்பிறழாதெங்கு, நிறைந்தபரனெத்தலமும் படைப்பானித்தலத்தைமுதனிருமித்தங்க, ணுறைந்தருளினனன்றி யின்னமுளதன்பெருமையுரைப்பக் கேண்மின். (௫)

திருவாலவாயென்றுகேட்டவரேயறம்பெறுவர்செல்வமோங்குந்
திருவாலவாயென்றுநினைத்தவரேபொருளடைவர்தேவதேவைத்
திருவாலவாயிடத்துக்கண்டவரேயின்பநலஞ்சேர்வரொன்றுந்
திருவாலவாயிடத்துவதிந்தவரேவீட்டுநெறிசேர்வாரன்றே. (௬)

சுரநதிசூழ்காசிமுதற்பதிமறுமைக்கதியளிக்குந்தூநீர்வையை
வரநதிசூழ்திருவாலவாய்சீவன்முத்திதரும்வதிவோர்க்கீது
திரனதிகம்பரகதியும்பின்கொடுக்குமாதலினிச்சீவன்முத்தி
புரனதிகமென்பதெவனதற்கதுவேயொப்பாமெப்புவனத்துள்ளும்.

ஆதலினிப்பதிவிட்டுப்பிறபதியிற்போய்நோற்போரங்கைகொண்ட
சீதளவானமுதேய்ப்பத்தித்திக்கத்தேம்பெய்துசெய்தநிம்பா
லோதனத்தைக்கைவிட்டுப்புறங்கையைநக்குவாரொப்பாரந்த
மாதலத்தின்பெருமைதனையாவரேயளவிட்டுவழுத்தற்பாலார். (௮)

மேற்படி - வேறு.

மற்றையதலங்கடம்மிற்பரிமகம்வாசபேய
மற்றமில்சோடசாகமக்கினிட்டோமம்யார்க்கு
முற்றருமிராசசூயமுதன்மகமுடித்தபேறுஞ்
செற்றமிறெரிசபூர்ணமுதலிட்டிசெய்தபேறும். (௯)

(௪) வீடு - விடுதல் - எனவே எல்லாப்பற்றையு மற்றவரடையு மிடம் என்பதுபொருள்.

(எ) சுரநதி - தேவநதியாகிய கங்கை.

(௯) வாசபேயமாவது - அந்தணர்கள், பன்னிரண்டுதினத்தில், இருபத்துமூன்று மேடங்களால் சிவபெருமானுக்குப் பிரீதியுண்டாகசசெய்யும்யாகம். சோடசாகமாவது, ஐந்துதினத்தில்,இரண்டு மேடங்களால்செய்யும்யாகம். அக்கினிட்டோமம் என்பதும் அதுவே. இராஜசூயமாவது-எல்லா அரசர்களையும் வென்று ஐந்து தினத்தில் அல்லது எ-௯-௧௨-தினங்களில் ௪-மேடங்களால் க்ஷத்திரியர்களால் செய்யப்படும்யாகம். தரிசபூரணமாவது-அமாவாசை, பௌரணைக ளில் சிவபெருமானுக்குப் பிரீதியுண்டுபண்ணச்செய்யும் ஸ்தாலிபாக்கிரியை. இஷ்டி - யாகமுதலியகிரியை

...ள்ளிழுதன்னங்கன்னியிவுளிதேரியானையில்லம்
வெள்ளியான்பொன்பூணுடைவிளைவொடுபழனமுன்னாத்
தள்ளருமடிமையாதிதானங்கள்செய்தபேறும்
வள்ளறன்காசியாதிபதிகளில்வதிந்தபேறும். (௧0)

சங்கைசாளிந்திவாணிக்காவிரிகண்ணவேணி
...ஙசபத்திரிதிம்பாலிதூயதண்பொருனைமுன்னாச்
சங்கையினதிகண்முற்றுமாடியதவத்தின்பேறு
மங்கலமதுரைதன்னில்வைகலும்வதிந்தோர்க்கெய்தும். (௧௧)

அன்னியதலங்கடம்மிலாற்றியபிரமகத்தி
பொன்னினைக்களவுசெய்தல்கள்ளுண்டல்புனிதவாசான்
பன்னியைப்புணர்தலின்னபாதகமனைத்துமென்றுந்
தன்னிகராலவாயில்வதிபவர்தமைவிட்டேகும். (௧௨)

மற்றையதலத்திற்சாந்திராயணமதியந்தோறு
முற்றபேறிங்குசுங்குலுண்டியாலடைபேருகு
மற்றையதலத்தின்மாதப்பட்டினிப்பலத்தின்பேறிங்
குற்றொருவைகலுண்டியொழிந்தவர்பெறும்பேருகும். (௧௩)

அயனகாலடைந்தகான்குதிங்களுணன்பாற்றும்பேறிவ்
வயனகாலடைந்தோற்குமட்டமிவிரதநல்கு
பயனசெய்தியாறுதிங்களுண்பாற்றும்பேறிவ்
வியனகர்ச்சோமவாரவிரதமேயளிக்குமன்றே. (௧௪)

விளையதலத்திலோராண்டுணவொழிந்தியற்றுநோன்பா
லானபேறிங்குநோற்குஞ்சிவனிராவளிக்குமிங்கே
ஊனவையமொறியும்வென்றோன்முப்பொழுதுண்டுவைகித்
கானமர்ந்தாலுங்காலுண்டியற்றுமாதவத்தோனுகும். (௧௫)

---

(௧0) என்இழுது - எண்ணெய்.

(௧௧) காளிந்தி - கரியநிறத்தை யுடையதோர்நதி. கண்ணவேணி - சையகிரியிலுற்பத்தியாகி இந்த்ரநீலபர்வதத்தி னருகிலோடும் நதி. ஆடியதவம் - தீர்த்தயாத்திரைப்பலன்.

(௧௩) சாந்திராயணம் - சந்திரசம்பந்தமுள்ள தோர்விரதம். எ...னை - சந்திரன்கலையுயரும் பூர்வபட்சப் பிரதமைமுதல், பௌர்ணமி வரையில் நாளுக்குநாள் ஒவ்வொருகவளம் உயர்த்தியும், தேய் கலை ...றையப்பெறும் கிருஷ்ணபட்சப் பிரதமைமுதல் அமாவாசை வரையில் லொவ்வொரு கவளமாகக்குறைத்தும் புசித்துசெய்யும் விரதம்.

(௧௫) காலுண்டென்றது - வாயுபட்சணஞ் செய்தலை. கால் - காற்று.

இந்தநான்மாடமோங்குமாலவாயிடத்தினரேனு
மந்தணர்தமக்கோர்முட்டியருந்தவர்தமக்கோர்பிச்சை
தந்தவர்புறப்புசெய்தசோடசதானந்தம்மால்
வந்தபேறடைவர்பல்வேறுரைப்பதென்மதியான்மிக்கீர். (சக

பல்வகைத்தலங்களெல்லாம்வைகியபயனுமென்றும்
பல்வகைத்தீர்த்தமெல்லாமாடியபயனுமென்றும
பல்வகைத்தானமெல்லாநல்கியபயனுமென்றும்
பல்வகைத்தானபூசைபண்ணியதவத்தின்பேறும். (சஎ

பல்வகைத்தவங்களெல்லாமுற்றியபயனுநாய
பல்வகைமந்திரத்திசெபதியபயனுநூலின்
பல்வகைக்கேள்வியெல்லாமாயந்துணர்பயனும்யோகம்
பல்வகைஞானமெல்லாம்பயின்றுணர்ந்தடங்கும்பேறும் (சஅ

அனையதொல்பதியிலென்றும்வைகுவோரடைவரென்று
வினையதொல்பதிக்குநேர்வேறில்லையிப்பதியின்மேன்மை
தனையறிபவராரீசனென்றறியாதலாலே
வினையைவெல்பவனங்கெய்திவதிவதேவேண்டுமாதோ. (சகூ)

மேற்படி - வேறு.

சைத்தலநான்கிரண்டுடைய மலர்க்கடவுண்மேலொருநாட்சய
லையாதி, வைத்தலமுமொருதுலையிட்டித்தலமுமொருதுலையிட்டிரண்
டுந்தூக்கி,வுத்தமமாந்திருவாலவாய்மிசவுங்கனத்ததுகண்டலின்மே
லா, வைத்ததலமிதுவென்று விதன்பெருமையாவரே வழுத்தற்பா
லார். (உ0)

---

(சகூ) சோடசதானமாவன - அன்னதானம், வஸ்திரதானம்,
பூதானம், கன்னிகாதானம், இரணியதானம், கோதானம், உபயமு
கி கோதானம், மகிஷீதானம், வருடைதானம், அஸ்வதானம், ந
வேதாஸ்வதானம், கஜதானம். காளாமுகிதானம், மகாமேருதான
ம், கற்பகவிருட்சதானம், வித்யாதானம், என்பன. முட்டி - ஓர்கை
ப்பிடி. இது முஷ்டி என்பதன் திரிபு.

(சகூ) அறிமின் என்னு முன்னிலைப்பன்மைஏவல்வினைமுற்று
ஈறுதொக்கு அறியெனநின்றது. தனையறிபவராரீசன்றுனன்றி, எ
னவும் பாடம்.

(உ0) துலை - துலாக்கோல், இது சினையாகுபெயராய்த் துல
த்தட்டை யுணர்த்திநின்றது.

தெய்வவித்தீர்த்தந்தன்னைநினைவின்றித்தீண்டினாலு
மவ்வியவினையினீங்கியரும்பெறல்வீடுசேர்வ
ரிவ்வுரைமெய்யேயாகுமென்னெனின்மனத்தாறன்றி
வெவ்வழறீண்டினாலுஞ்சுடுமன்றிவிடுமோவம்மா. (௧௯)

ஆருமந்நீரிலென்றுமாடினார்சீவன்முத்தி
சேருவரந்நீராடுஞ்சிறப்புறுபயனுக்கொவ்வா
வாருணவாக்கினேயமந்திரமிவைமுன்னான
பேருணர்வளிக்குநானஞ்செய்தவர்பெறும்பேறெல்லாம். (௨0)

அன்னநீர்தனையுமாடியாலவாயுடையநாதன்
றன்னையும்பணிவோன்மேலைப்பாகதிதன்னைச்சாரு
மென்னநன்னூலிற்சொன்னபவித்திரமெவைக்குமேலாய்ப்
பன்னரும்புனிதமானபவித்திரமாகிநிற்கும். (௨௧)

ஆதரவிலனாயந்நீராடினோன்சுவர்க்கஞ்சேரு
மாதரவுளனாய்மூழ்கினவனாதியானோர்க்
காதரவரிசியெள்ளுத்தருப்பணமமையச்செய்தோ
னாதரவேள்விமுற்றுமாற்றியபயனைச்சேரும். (௨௨)

ஏனமாதலங்கடம்மிலிருந்துசெய்விரதம்பூசை
தானமாதருமமோமந்தவஞ்செபந்தியானந்தம்மா
லானமாபயனிற்கோடியதிகமாமடைந்துமூழ்கி
ஞானமாதீர்த்தஞாங்கரிருந்தவைநயந்துசெய்யின். (௨௩)

பிறந்தநாளந்நீர்மூழ்கின்மேலைவெம்பிறவிப்பௌவ
மறித்திங்கடேள்கும்பமதிகளின்மூழ்கித்தென்பா
லுறைந்தவர்பொருட்டுப்பிண்டமுதவினுலவர்தாமாழ்ந்து
மறைந்திடுபிறவிப்பௌவநின்றுமேலெழுவாரன்றே. (௨௪)

---

(௧௯) ஒளவியவினை - பொறாமைமுதலிய தீக்குணங்கள்.

(௨0) வாருணமாக்கினேயமந்திரம், என்றது - வருணமந்திரஸ்நானம், ஆக்னேயமந்திரஸ்நானங்களை.

(௨௧) என்ன - எப்படிப்பட்ட. பவித்திரம் - பாவத்தை நீக்கி மோட்சத்தைத்தருவது.

(௨௨) ஆதரம் - விருப்பம்.

(௨௩) ஞாங்கர் - கரை.

(௨௪) மறி - சித்திரைமாதம், தேள் - கார்த்திகைமாதம்-கும்பம் - பங்குனிமாதம். தென்பாலுறைந்தவர் - பிதிரர்.

அத்தடமருங்கின்யாவர்தென்புலமடைந்தோர்தங்கள்
சித்தமாசகற்றவேண்டிச்செய்கடன்முடிக்கினன்றே
யெத்தனையெண்ணோர்ந்தாலுமெள்ளுக்காயிரமாண்டாக
வத்தனையாண்டுமட்டுமவரைவிண்ணுளவைப்பார். (௨௫)

மூவகையுலகிலுள்ளதீர்த்தமுமுறையாலென்றுஞ்
சேவகஞ்செய்யுமிந்தத்தீர்த்தமெந்நாளுமூழ்கி
யேவரந்நீராலென்றுமீசனைப்பூசைசெய்வோ
ராவரிப்பிறவிதன்னிலவர்கதிக்கரையைச்சார்வார். (௨௬)

விடுத்திடலரியசித்தவேள்விமாவிரதம்வேதந்
தடுத்திடலரியதானந்தவமிவைதரும்பேறெல்லா
மடுத்ததன்கரையில்வைகியீசனையருச்சிப்போர்க்குக்
கொடுத்திடுபுண்ணியத்திற்கோடியிலொன்றுக்கொவ்வா. (௨௭)

உம்மையிற்பிறவிதோறுநியமநல்லொழுக்கம்பூண்டு
பொய்ம்மையில்விரதந்தானந்தவஞ்செய்துபுனிதராகிச்
செம்மைநன்னெறியினின்றசித்தருக்கலதித்தீர்த்த
மிம்மையிலடைந்துநித்தமாடுதற்கெய்தாதன்றே. (௨௮)

மேற்படி - வேறு.

௧. மதிகதிரோர்ளிடத்தொடுங்குதினங் (௨) திங்கட்பிறப் (௩) பரவ
ம்வாயங்காந்து, கதிர்கடமைவிழுங்குதினம் (௪) விதிபாதமிந்நாளி
ற்கருதிமூழ்கித், துதிகடருப்பணந்தானம் புரிதன் மனுவோதுதலத்
தொகையொன்றற்கொன்,றதிகபலனம்முறைநூறுயிரநூறுயிரயோ
ரனந்தமாகும். (௨௯)

பொருவரியதகர்த்திங்கடுலாத்திங்களிவையுதிக்கும்போதுமூழ்கி
னொருபதினுயிரமடங்காஞ்சுறவுகவைத்தாளலவனுதிப்பின்மூழ்கி
னிருபதினுயிரமடங்காமிந்திரவியிடத்தொடுங்குமிந்துவாரம்
வருவதறிந்தாடிமனுவோதன்முதற்செயினனந்தமடங்குண்டாகும்.

---

(௨௬) சேவகம் - ஏவற்பணிவிடை.

(௨௮) உம்மை - முற்சனனம்.

(௨௯) ௧. அமாவாஸ்யை, ௨. மாசப்ரவேசம், ௩. கிரகணபுண்ய காலம், ௪. மாதங்கடோறும் வரப்பட்ட இருபத்தேழு யோகங்களில் ஒன்றாய்ப், பிதிர்கர்ம விசேடங்களுக்குரிய சிரார்த்தவகை தொண்ணூற்றாறிலொன்றாய் வருவது.

(௩0) தகர் - மேஷம் - சித்திரை. துலாத்திங்கள்-ஐப்பசிமாதம் சுறவு-மகரம்-தைமாதம். அலவன் - கடகம் - ஆடிமாதம். இந்திரவியிடத்தொடுங்கு மிந்துவாரமென்றது. சோமவார அமாவாசையை. மநு - ஸ்ரீபஞ்சாட்சரம், சடாக்ஷரமுதலிய மகாமந்திரங்கள்.

பிரயாகைதனின்மகா மதிநாண்முப்பதுங்குடைந்துபெறும்பே
றிந்தத், திரையார்பைந்தடத் தொருநாண்மூழ்குவோன்பெறும்விர
தசீலம்பூண்டு, வரையாமலொருவருடம் படிந்துமையையமார்சிகாம
ணியாம்வேத, வுரையானைவழிபடுமேன் மலடிக்குநன்மகப்பேறுண
டாமன்றே. (௩௧)

எண்டிசையநதிவாவிவடிவானமாதீர்த்தமெல்லாமிப்பொற், பு
ண்டரிகதடத்திலொருகோடியிலோர்கூறுநிகர்போதாவீது, கண்ட
தனாலறநீண்டப்பெற்றதனாற்பொருளங்கையாலள்ளிக், கொண்
டதனாலின்பநலங்குடைந்ததனாற்பேரின்பங்கொடுக்குமன்றே. (௩௨)

மேற்படி - வேறு.

முன்னவனருளிச்செய்தகாரணமுறையாலன்றி
யின்னமிப்புனிதவாவிக்கேதுவாலெய்துநாம
மின்னவிர்சடையான்சென்னிமேவியகங்கைநீரிற்
பின்னதுகலந்தநீராற்பெறுஞ்சிவகங்கையென்றும். (௩௩)

அலகிலாத்தீர்த்தந்தம்முளதிகவுத்தமமாய்த்தோன்றி
யிலகலாலிதனைத்தீர்த்தவுத்தமமென்பாராய்ந்தோர்
பலவிதழ்விரித்துசெம்பொற்பங்கயமலர்ந்தநீரா
லுலகவர்யாரும்பொற்றாமரையெனவுரைப்பரன்றே. (௩௪)

தருமமுன்னாகுநான்குந்தருதலாற்றருமதீர்த்த
மருமைசாலருத்ததீர்த்தமரும்பெறற்காமதீர்த்த
மிருமைசேர்முத்திதீர்த்தமென்பதாமினையதீர்த்தம்
வெருவருபாவமென்னும்விறகினுக்கெரியாமன்றே. (௩௫)

இவ்வருந்தலத்தினான்றபெருமையுமெரிகால்செம்பொற்
றெய்வதபதுமதீர்த்தப்பெருமையுஞ்செப்பக்கேட்டோ
ரெவ்வமில்போகம்வீடுபெறுவரென்றிசைத்தான்முந்நீர்ப்
பௌவமுண்டமார்வேந்தன்பரிபவவிழுமந்தீர்த்தோன். (௩௬)

தீர்த்தவிசேடம் முற்றிற்று.



ஆக படலம் ௭ - க்கு - திருவிருத்தம் - ௨௧௦.

---

(௩௬) பரிபவம் - துன்பம்.

## மூர்த்திவிசேடம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஆலவாயமர்ந்தசெம்பொனம்புயப்பெருந்தீர்த்தத்தின்
மேலவாம்பெருமைதன்னைவிளம்புவாரெவரேயங்க
ணீலமாமிடற்றுமுக்கணிராமயனறிவானந்த
மூலமாவிலிங்கமேன்மைமுறையினாலறையலுற்றாம். (௧)

பொன்னெடுமேருவெள்ளிப்பொருப்புமந்தரங்கேதார
வன்னெடும்புரிசைசூழ்ந்தவாரணவாசியாதிப்
பன்னருந்தலங்களிற்பராபரவிலிங்கந்தோன்று
முன்னரிக்கடம்பின்மாடேமுளைத்ததிச்சைவலிங்கம். (௨)

அப்பதியிலிங்கமெல்லாமருட்குறியிதனிற்பின்பு
கப்புவிட்டெழுந்தவிந்தக்காரணமிரண்டினாலு
மொப்பரிதானஞானவொளிதிரண்டானவிந்தத்
திப்பியவிலிங்கமூலவிலிங்கமாய்ச்சிறக்குமன்றே. (௩)

இந்தமாவிலிங்கத்தெண்ணான்கிலக்கணவிச்சைமேனி
யந்தமிலழகன்பாகத்துமையொடுமழகுசெய்து
சந்ததம்விளக்கஞ்செய்யுந்தகைமையைநோக்கிச்சோம
சுந்தரனென்றுநாமஞ்சாத்தினார்துறக்கவாணர். (௪)

திறப்படுமுலகமெங்கும்வியாபியாய்ச்சிறந்துநிற்கு
மறப்பெருங்கடவுள்சோமசுந்தரனதனாலன்றே
கறைக்கதிர்வடிவேற்றென்னன்கையிற்பொற்பிரம்புபட்ட
புறத்தடித்தழும்புமூன்றுபுவனமும்பட்டதன்றே. (௫)

சொற்றவிச்சமட்டியானசோமசுந்தரனைக்காணப்
பெற்றவர்வியட்டியானபிறபதியிலிங்கங்காண
லுற்றவராவரென்னென்றுரைக்கின்வேரூட்டுநீர்போய்
மற்றையசினைகளெல்லாந்தழைவிக்குமாத்திரமாதோ. (௬)

---

(௧) நிராமயன் - நோயில்லாதவன். நீலம், மா, என்பன, ஒரு பொருட் கிளவிகள்.

(௨) வாரணவாசி - கோழிவசிப்பது, வாரணம் - கோழி. இது காரணம்பற்றியே, காசிக்குக் குக்குடநகரம்என்னும்பெயரும்வந்தது.

(௪) சோமசுந்தரன் - சஹ - உமா - சுந்தரன் - எனவே, உமையோடுகூடியவழகன். என்பதுபொருள்.

(௫) வியாபி - வியாபகத்தையுடையவன்.

எத்தலத்தியாவனெண்ணெண்டிருவிளையாடல்செய்தா
னத்தலத்தவனுக்கொப்புமதிகமாஞ்சிறப்புப்பெற்ற
வுத்தமமென்றுமெந்தவுலகிலுமில்லையந்த
வித்தகனதிகத்தன்மையெனைத்தெனின்விளம்பக்கேண்மின். (௭)

பொருப்பினுட்டலைமையெய்தும்பொன்னெடுங்குடுமிமேரு
தருக்களிற்றலைமைசாருந்தண்ணறுந்தெய்வதாரு
விருப்புறுவேள்விதம்முண்மேம்படும்புரவிமேத
மருட்படுதானந்தம்முள்விழுமிதாமன்னதானம். (௮)

மனிதரிலுயர்ந்தோராதிமறையவர்தேவர்தம்மிற்
பனிதருதிங்கள்வேணிப்பகவனேயுயர்ந்தோன்வேட்டோர்க்
கினிதருள்விரதந்தம்முளதிகமாமிந்துவாரம்
புனிதமந்திரங்கடம்முட்போதவைந்தெழுத்துமேலாம். (௯)

மின்மைசான்மணியிற்சிந்தாமணிவரம்விழுப்பநல்குந்
தன்மைசாலறங்கடம்மின்மிகுஞ்சிவதருமமென்ப
வின்மைசானெறிநின்றோருக்கேற்குநற்கலங்கடம்மி
னன்மைசான்றவரேமுக்கணுதனுக்கன்புபூண்டோர். (௧0)

தீயவாஞ்சுவைப்பாலாவிற்றேவராவதிகம்பல்வே
றுயமாதீர்த்தந்தம்முளதிகமாஞ்சுவணகஞ்ச
மாயமாசறுக்கவெல்லாத்தலத்திலும்வதிந்துமன்னுந்
தூயவானவரிற்சோமசுந்தரன்சிறந்தோனாகும். (௧௧)

அந்தமுமுதலுமில்லாவகண்டபூரணமாயார்க்கும்
பந்தமும்வீடுநல்கும்பராபரச்சோதிதானே
வந்தனைபுரிவோர்க்கிம்மைமறுமைவீடளிப்பானந்தச்
சுந்தரலிங்கத்தென்றும்விளங்குவான்சுருதியேத்த. (௧௨)

இத்தகுசயம்புதன்னையேனையசயம்புவெல்லா
நித்தமுந்தெரிசித்தேகுநிருமலவொளியாமிந்த
வுத்தமலிங்கங்கண்டோருரையுணர்வொடுங்கவுள்ளே
சித்தமாசொழியத்தோன்றுஞ்சிவபராஞ்சுடரைக்கண்டோர். (௧௩)

---

(௭) வித்தகன் - ஞானசொரூபன். வித்தகம் - ஞானம்.

(௧0) மின்மை-மின்-ஒளி-மை பகுதிப் பொருள் விகுதி. கலம்-தானபாத்திரம்.

(௧௧) தீயவாஞ்சுவைப்பால் - இனிமை விரும்புஞ் சுவையையுடையபால். தீ - இனிமை. அவா - விருப்பம்.

(௧௩) சயம்பு-ஸ்வயம்பு என்பதன் றிரிபு. தானே யுண்டானது என்பது பொருள். ஸ்வயம்-தானே, பு - உண்டானது.

இத்தனிச்சுடரைநேர்கண்டிறைஞ்சினோர்பாவமெல்லாங்
கொத்தழற்பொறிவாய்ப்பட்டபஞ்சுபோற்கோபமூள
மெய்த்தவஞ்சிதையுமாபோன்மருந்தினல்வீயுநோய்போ
லுத்தமகுணங்களெல்லாமுலோபத்தாலழியுமாபோல். (௧௪)

கலிகடலிரவிதோன்றக்கருகிருளுடையுமாபோ
லொலிகெழுபெருங்காறள்ளவுடைபடுமேகம்போல
வலிகெழுமடங்கல்சீறமாயுமால்யானைபோலக்
குலிசவல்லேறுதாக்கப்பொடிபடுங்குன்றம்போல. (௧௫)

மருட்சிசெய்காமநோயான்மதிகெடுமாறுபோல
வருட்சிவஞானநோக்கால்வலிகெடுமவிசசைபோலத்
தருக்குறுமுவணஞ்சீறத்தழலராவிளியுமாபோற்
செருக்குறவழியுங்கற்றகல்விபோற்சிதையுமன்றே. (௧௬)

புலரியிற்சிவன்முத்திபுரேசனைக்காணப்பெற்று
லலைகடனுன்குபட்டவவனிமாதானஞ்செய்த
பலனுறுங்கதிர்காலுச்சிவைகலிற்பணியப்பெற்றார்
கலைஞர்பானூற்றுப்பத்துக்கபிலைமாதானப்பேறும். (௧௭)

விண்ணிடைப்பரிதிப்புத்தேண்மேலைநீர்குளிக்குமெல்லை
யண்ணலைவணங்கிற்கோடியானினத்தானப்பேறும்
பண்ணவர்பரவும்பாதியிருள்வயிற்பணியப்பெற்றால்
வண்ணவெம்புரவிமேதமகப்புரிபெரும்பேறெய்தும். (௧௮)

இன்னனவதிகமாம்பேறறிந்துபோயெத்தேவர்க்கு
முன்னவன்சமட்டிவிச்சாபுரமுறைமுதல்வன்றன்னை
சொன்னவிக்காலந்தோறுமிறைஞ்சியுந்தொழுதுஞ்சூழ்ந்தும்
பொன்னடிக்கன்பராகிவழிபடும்புனிதசீலர். (௧௯)

(௧௫) மடங்கல்-சிங்கம். குலிசம் - வச்சிராயுதம், ஏறு - இடி. தோன்ற, தள்ள, சீற, தாக்க, என்பன காரணப்பொருளில்வந்த வினையெச்சங்கள்.

(௧௬) செருக்கு - அகங்காரம்.

(௧௭) புலரி - விடியற்காலம், கடல் நான்கென்றது, நாற்றிசைக்கடல்களை. உச்சிவைகல் - உச்சிக்காலம்.

(௧௮) புரவிமேதமகம்- அஸ்வமேதயாகம்.

உம்மையில்வினைகளென்னும்பிணியவிழ்ந்தொருவித்தூய
செம்மையாகியானாத்திருவொடுசெல்வமோங்க
இம்மையில்போகமூழ்கிமலவிருள்வீக்கநீந்தி
மைம்மலிகண்டத்தெங்கோன்மலரடிநீழல்வாழ்வார். (௨௰)

மேற்படி-வேறு.

அறவுருவனாலவாயானாமஞ்செவிமடுத்தாலடைந்தபத்துப், பிறவிவினை யறுநினைந்தானூறுபெரும் பவப்பாலப்பிணிபோங்கூட, விறைவனையின் றிறைஞ்சுதுமென் றெழுந்துமனைப் புறம்போந்தாலீரைஞ்ஞூறு, மறமுறுவெம்பவத்திழைத்த பாதகவல்வினையனைத்துமாயுமன்றே. (௨௧)

புழைக்கைவரை தொலைத்தானைத் தெரிசித்தோராயிரவாம் புரவிவேள்வி, தழைத்தபெரும்பயன்பெறுவ ருருத்திரசூக்கம்மதனாற்றவவானோர்க, டொழற்கரியான் றனைத்துதித்தோர் கணைத்துக்காயிரராசசூயயாக, மிழைத்தபெரும் பயன்பெறுவர்சமட்டிவடி வாகியவவ்விலிங்கந்தன்னை. (௨௨)

அங்கையளவாகியநன்னீராட்டிப் பூசித்தோரளவிலேனைத், துங்கதலத்துறையிலிங்கமூர்த்திகளைச சிவாகமநூல்சொன்னவாற்றான், மங்கலமாகியமுகமனீரெட்டும் வழுவாதுவாசந்தோய்ந்த, செங்கனகமணிக்கலசப்புனலாட்டி மாபூசைசெய்தோராவார். (௨௩)

---

(௨௰) செம்மை-நடுநிலைமை. ஆனாத்திரு-நீங்காதசெல்வம்.

(௨௧) மறம்-தீமை.

(௨௨) சூக்கம்-சூக்தமென்னும் வடமொழித்திரிபு.

(௨௨) புழைக்கை-துவாரத்தையுடைய கையையுடையது, என உருபும் பயனுந் தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித் தொகையாய், யானைக்குக் காரணப் பெயராய்வந்தது. வாம்புரவி—தாவுங்குதிரை.

(௨௩) முகமன்-உபசாரம். இது சோடசோபசாரம், தசோபசாரம், பஞ்சோபசாரம், என மூன்றுவகைப்படும். அவற்றுள்சோடசோபசாரமாவன—ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம்,சந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அர்க்கியம், புட்பதானம், தூபம், தீபம், நைவேத்தியம், பானீயம், ஆராத்திரிகை, ஜபசமர்ப்பணை என்பன. தசோபசாரமாவன—மேற்காட்டிய சோடசோபசாரத்துள், ஆவாகனமுதல் புட்பதானம் வரையிலுள்ளபத்தும். பஞ்சோபசாரங்களாவன—பிரிதிவுசம்பந்தமான, கந்தமூலபலாதிகள், சந்தகுசுமாதிகள், அன்னாதிகளும்; அப்புசம்பந்தமான, வாரி, பால், தயிர், வஸ்திரமுதலியவைகளும்; தேயுசம்பந்தமான உலோகாதியாபரணங்களும், தீபங்களும்; வாயுசம்பந்தமான தூபம், சாமரம், மயில்விசிறியாதிகளும்; ஆகாயசம்பந்தமான, மணியோசை, தோத்திரத்தொனி முதலியவைகளுமாம்.

அவ்வண்ணஞ்சுந்தரனையைந்தமுத மானுதவுமைந்துதீந்தேன், செவ்வண்ணக்கனிசாந்தச்சேறுமுதன் மட்டித்துத்தேவர்தேறு,மெய்வ்வண்ணங்குளிரவிரைப்புனலாட்டி மாபூசைவிதியாற்செய்தோர், மைவ்வண்ணவினைநீந்தியறமுதனாற் பொருளடைந்துமன்னிவாழ்வார். (உ௪)

நல்லவகைமுகமணிரெட்டுள்ளுடிவடித்தவிரைநன்னீராட்ட
வல்லவர்நூறாயிரமாமேதமகப்பயன்பெறுவர்வாசநான
மெல்லவிர்குங்குமஞ்சாந்தமிவைபலவுமட்டித்தோரெழிலாற்செய்வ
முல்லைநகையாரோடும்விரைக்கலவைகுளித்தின்பமூழ்கிவாழ்வார். ()

நன்மலரோன் ருலவாயான் முடிமேற்சாற்றி ஞணயந்துநூறு, பொன்மலர்கொண் டயற்பதியிற் பூசித்தபயனெய்தும் புனிதபோகத், தன்மைதருசுந்தரற்குத் தூபமொருகாற்கொடுப்போர் தமக்குத் தாஙகள், சொனமனமெய் யுறசசெய்த குற்றமாயிரம் பொறுப்பன் சுருதிநாதன். (உ௬)

திருவமுது நிவேதிப்போ ரவிழொன்றற் குகமொன்றாச் சிவலோகத்தின், மருவிநிலைற போகமுடன் வைகுவர்தாம் பூலமுகவாச மீந்தோர், பொருவரிய கடவுளராண் டொருநூறு கோடிசிவ புரத்துவாழ்வா, ரொருபளித விளக்கிடுவோர் வெண்ணீறமுங் கண்ணுதலுமுடையராவார். (உ௭)

---

(உ௪) ஐந்தமுதம, னைறது-பஞ்சாமர்தம. அவை-பால், நெய், தேன், சர்க்கரை, பழம். இவற்றள், பாலநீக்கித் தேஙகாய்த்திருகல் கூட்டி ஐந்துவகையாகசகொள்ளுதலும்; தேங்காய்த் திருகல்நீக்கி, நீர்கூட்டி யைந்தென்றுகொள்ளுதலும்; பழவர்க்கங்களெல்லாம் ஒன்றாகவும்; நெய், தயிர், பால், இம்மூன்றையும் இனம்பற்றியொன்றாகவுங்கொண்டு, இவ்விரண்டோடு தேன், சர்க்கரை, நீர்இவற்றைக்கூட்டி ஐந்தென்றுகொள்ளுதலும் உண்டு. ஆனுதவு மைந்தென்றது-பஞ்சகௌவியம்-அவை-பால், தயிர், நெய், கோமயம், கோசலம் இவற்றோடு கோரோசனமுங்கூட்டி கவ்வியம் ஆறு எனவுங் கூறுதலுமுண்டு. கவ்வியம்-கோசம்பந்தமாயுள்ளன. கோ - பசு. மட்டித்தல்-பூசுதல். விரைபுனல் - வாசனையூட்டிய திருமஞ்சனம். விரை வாசனை. மஞ்சனம்-நீர்.

(உ௬) சுருதி, காதாற்கேட்கப்படுவது-வேதம்.

(உ௭) முகவாசம்-தக்கோலம் ஏலம் தகைசா லிலவங்கம், கர்ப்பூரம் சாதியோடைந்து, என்னுமிவ்வைந்தும். பளிதம் - கர்ப்பூரம் பளிதவிளக்கு-கர்ப்பூரநிராஞ்சனம்.

நறுந்திருமஞ்சனமெடுக்கக் குடமாட்டமணிக்கலச நல்லவாசம், பெறுந்தகையதாபக்கா றீபக்கான்மணியின்ன பிறவுங்கங்குற், றெறுங்கதிர்கான்மணிமாட மதுரைநாயர்சகீந்தோர் செய்தபாவம், வெறுந்துகள்செய்தைம்பொறிக்கும் விருந்தூட்டும்பெருங்காம வெள்ளத்தாழ்வார். (உஅ)

கயலிசையுங்கண்ணுமைகோன் றிருமுன்னர்ப்பல்லியமுங் கல்லென்றார்ப்ப,வியலிசையபாடலினோ டாடலினைசெய்விப்போ ரிறுமாப்பெய்திப், புயலிசையவியங்கலிப்ப மூவுலகுந்தொழவாசாய்ப் பொலங்கொம்பாடுஞ், செயலிசையவணங்கனை யாராடாங்குகண்டின்பச் செல்வத்தாழ்வார். (உகூ)

ஒருகாலட்டாங்கமுடன் பஞ்சாங்கமுடனுத லொண்செங்கால்வெண், குருகாலுமலர்த்தடஞ்சூழ் கூடலையகர்ப்பணிவோர் கோலொன்றேசசிப்,பொருகாலின்வருபரித்தேர்மன்னவராயாவருந்தம்புடைவர்தெய்தி, யிருகாலுந்தலைவருட வெக்காலுந்தமைவணங்க விருப்பரன்றே. (௩0)

இத்தகையதிருவாலவாயுடையான் றிருமுன்னரியற்றுமோம
மெய்த்தவமந்திரந்தானமின்னவணுவளவெனினுமேருவாகு
முத்தமமாம்விலிங்கப்பெருமையெலாம்யாவரளந்துரைப்பர்வேத
வித்தகரேசிறிதறிந்தவாருரைத்தேமினிப்பலகால் விளம்புமாறென்.

இத்தலத்துக்கொப்பாக வொருதலமும்பொற்கமல மென்னுமிந்த, வுத்தமதீர்த்தத்துக் கொப்பதொரு தீர்த்தமுமெய் யுணர்வானந்த, வித்தனையவிலிங்கமிதற் கொப்பாவோரிலிங்கமும்பார் விண்மேலென்னு, முத்தலத்துமிலையந்த மூர்த்திதிருநாமங்கண் மொழிபகரேண்மின். (௩உ)

---

(உகூ) இசைய என்பவற்றுள், இயலிசைய பாடலென்றவிடத்து இசையையுடையவெனப் பெயரெச்சத்தின்மேலும், ஏனைய உவம உருபிடைச சொல்லடியாய்ப்பிறந்த வினையெச்சங்களின் மேலும நின்றன. இயம்-வாத்தியம். அணங்கு-தெய்வப்பெண்.

(௩0) குருகு-ஆலும்-அன்னங்கள் ஒலிக்கும். அட்டாங்கம்-தலை, இரண்டுகை, இரண்டுசெவி, மோவாய், இரண்டுதோள் என்னு மிவ்வெட்டுறுப்பும் நிலத்திற் பொருந்தவணங்குதல். அஷ்டம்-எட்டு-அங்கம்-உறுப்பு. பஞ்சாங்கம்-தலை, இரண்டுகை, இரண்டுமுழந்தாள் என்னு மிவ்வைந்துறுப்புக்களும் நிலத்திற்பொருந்த வணங்குதல். பஞ்சம்-ஐந்து.

கருப்பூரசுந்தரன்பூங்கடம்பவனசுந்தரனுட்காவாத்தொண்டர்
விருப்பூருங்கலியாணசுந்தரனல்லறவடிவாய்விளங்குமேற்றுப்
பொருப்பூருமபிராமசுந்தரன்றேன்புடைகவிழப்பொன்னிற்பூத்த
மருப்பூசுசண்பகசுந்தரன்மகுடசுந்தரன்முன்வாழிமன்னே. (௩௩)

மான்மதசுந்தரன்கொடியபழியஞ்சுசுந்தரனோர்மருங்கின்ஞானத்
தேன்மருவியுறைசோமசுந்தரன்றேன்செவ்வழியாழ்செய்யப்பூத்த
கான்மருவுகடம்பொழில்சூழாலவாய்ச்சுந்தரன்மீன்கணங்கள்சூழப்
பான்மதிசூழ்நான்மாடக்கூடனாயகன்மதுராபதிக்குவேந்தன். (௩௪)

சிரநாலோன்பரவரியசமட்டிவிச்சாபுரநாதன்சிவன்முத்தி
புரநாதன்பூவுலகசிவலோகாதிபன்கன்னிபுரேசன்யார்க்கும்
வரநாளுந்தருமூலவிலிங்கமெனவிவைமுதலாமாடக்கூட
லரனுமின்னமளப்பிலவாகுமூலகுய்யவவ்விலிங்கம். (௩௫)

பாதாளமேழுருவமுளைத்தெழுந்தவ்விலிங்கப்படிவந்தனு
ளாதாரமாகவமர்ந்தறுபத்துநாலுவிளையாடல்செய்த [முன்
போதானந்தன்பெருமைகுரவன்மொழிப்படியே புகன்றேமென்
வேதாதிகலைதெரிந்தமலயமுனிகேட்டறவோர்வினுதல்செய்தார்.

அருட்கடலேயிறைவிளையாட் டறுபத்துநான்கென்றாயவையா
னந்தப், பொருட்கடவுளெக்காலத் தியாவர்பொருட்டாடினனெம்
போதந்தேறித், தெருட்படாவரன்முறையாற் செப்புகெனக்காங்கு
வித்தார்தென்பால்வெற்பி, விருப்பவனும்வினயபடிக் கிறைநிரம்ப
தொகுத்துவிரித் தியம்புகின்றான். (௩௭)

மூர்த்திவிசேடம் முற்றிற்று.



ஆ படலம் அ - க்கு - திருவிருத்தம் - ௩உஎ.

---

(௩௩) அறவடிவாய்விளங்குமேற்றுப்பொருப்பு என்றது, தரும விடையை.

(௩௪) ஓர் மருங்கின் ஞானத்தேன் என்றது, உவம ஆகுபெயராய் உமாதேவியை யுணர்த்திகின்றது.

(௩௬) பாதாலமேழ் என்றது, பாதாளத்தை யீறாகவுடையகீழ் ஏழுலோகத்தினை, அவை. அதலம், விதலம், சுதலம், தராதலம் ரசாதலம், மகாதலம், பாதாளம், என்பன. கேட்ட, என்பதில், அ ரவீறு, தொகுத்தல். இறை-உத்தரம்.

சிவமயம்.

# திருவிளையாடற்றொகையாகிய * பதிகம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வானவர்கோன்பழிதொலைத்தவிளையாட்டுங்கரிசாபமாய்த்தவாறு
மீனவர்கோன்காடெறிந்துபுரங்கண்டபெருஞ்சிறப்புமீனநோக்கி
யானதடாதகையழல்வாயவதரித்துப்பாராண்டவருளுமீசன்
றானவளைமணஞ்செய்துமுடிதரித்துமண்காத்ததகைமைப்பாடும்.()

புலிமுனியும்பணிமுனியுந் தொழவெள்ளிமன்றுணடம் புரிந்தவாறும், வலிகெழுதோட் குண்டகட்டுக் குறட்கன்னக் குன்றளித்தவகையும்பின்னு, நலிபசிநோய் கெடவன்னக் குழியழைத்துக்கொடுத்துநீர் நசைக்குவைகை, யலைபுனல்கூ யருத்தியதும் பொன்மாலைக்கெழுகடலு மழைத்தவாறும். (உ.)

அந்தரர்கோனுதனத்தி லுறைமலயத்துவசனைமீண் டழைத்தவாறுஞ், சுந்தரவுக்கிரகுமா னவதரித்தவாறும்வளை சுடர்வேல்செண்டு, தந்தையிடத்தவன்பெற்ற வாறுமவனவ்வடிவேல் சலதிவீறு, சிந்தவிடுத்ததுமகவான் முடியைவளையெறிந்திறைவன் சிதைத்தவீறும்.

பொன்னசலந்தனைச்செண்டாற் புடைத்துநிதியெடுத்ததுவும் பனிதர்க்கீசன், பன்னரியமறைப்பொருளைப் பகர்ந்ததுவுமாணிக்கம் பகர்ந்தவாறுந், தொன்னகர்மேனீர்க்கிழவன் வரவிடுத்தகடல்சுவறத்தொலைத்தவாறு, மன்னதனித்தொன்மதுரை நான்மாடக்கூடனகரானவாறும். (ச)

---

*— "பதிகக்கிளவி பல்வகைப்பொருளைத், தொகுதியாகத் தொகுத்துரைப்பதுவே" என்னுஞ் சூத்திரப்படி, இங்குப்பலவகைத் திருவிளையாடல்களையுந் தொகுத்துக் கூறியதனால், பதிகம் எனப்பெயர் வந்தது.

(க) மீனவர்கோன், என்றது மச்சக்கொடியையுடைய பாண்டியர்களுட்சிறந்த குலசேகரபாண்டியனை.

(உ) குண்டு - ஆழம். அகடு - வயிறு. குறள் - குண்டோதரன். கூவி - இது கூய் எனத் திரிந்துநின்றது.

(ங) வளை-சக்கரம். வீறு-செருக்கு.

(ச) நீர்க்கிழவன்-வருணன்.

